தேவர் செப்பும் "செம்மை நெறியிற் றெளிவு பெற" வேண்டியதெல்லாம் பக்தி சிரத்தையே யாகும். ஆசிரியர் கூறும் உண்மைகளை அறிய வேண்டுமென்னும் ஆசை யிருந்தால் நிச்சயமாய் உண்மைகளை அறிந்துகொள்ள முடியும். உண்மையில் ஆசையுள்ளவன் உண்மையைக் காணாது போகான். அன்பில்லாதவனோ அணுவளவும் அறியான்.

"அருட் கண்ணிலார்க்கு அரும்பொருள் தோன்றா
அருட் கண்ணுளோர்க்கு எதிர் தோன்றும்"

என்பது திருமூலர் உறுதிமொழி.

ஆகையால் யாரும் குறள் கற்கப் பேரறிவும் பிறர் துணையும் தேவை என்று கருதவேண்டாம். சில சமயங் களில் பொருள் காண்பது அரிதாகத் தோன்றினாலும் சிறிது முயற்சி செய்தால் போதும், பொருள் விளங்கி விடும். வள்ளுவர் கஷ்டப்பட்டுப் பொருள் தெரிந்து கொள்ளும்படி எந்தக் குறளையும் இயற்றியிருக்கமாட் டார், ஏனெனில் அவரே

"எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு"

என்று வற்புறுத்தியிருக்கின்றார். தவிர, கஷ்டம் ஏற்பட் டாலும் அதற்காகக் காரியத்தைக் கைநழுவ விடலாகாது.

"அருமை யுடைத்தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்"

என்றும் வாக்களிக்கின்றார். மேலும்,

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"

ஆகையால் டால்ஸ்டாய் கூறும் வண்ணம் குறளைக் கற்பார் குறளாசிரியரின் தேர்ந்த கருத்து இதுவென்று கண்டு கொள்ளுதல் முடியாத காரியமன்று. அவ்விதம் கற்று அறிவதே பயன் அடையும் பாதையுமாகும்.

## கற்பது எதற்கு ?

அறநூல கறபது எதறகாக? வாழககை எனனும் கடலில உளள கறபாறைகள நீாசசுழிகள முதலிய அபாயஙகளை முனகூடடி அறிநது அவைகளினினறும் விலகி நனனெறியில நினறு வாழககையின லடசியத் தையும அதன பயனாக நிததிய இனபததையும அடை வதறகாகவே கபபலோடடும மீகாமன உபயோகிககும் கடலமாாககபபடம போலவே வாழககை லடசியம் விருமபும மனிதாகளும வளளுவா குறளை உபயோகிகக வேணடும வளளுவரே

இழுகக லுடையுழி யூறறுககோ லறறே
ஒழுகக முடையாாவாயச சொல

எனறும கூறியிருககினறாா அஙஙனம வளளுவா குறளைத தமவாழககைத துணையாகக கொளள விருமபுபவா அதைததாஙகளாகவே கறறுப பொருளதெரிநது அனுஷ டிகக முயலுதல வேணடும அபபொழுதுதான அது பயன அளிககும. குழநதையைப போஷிபபது குழநதை தானாகவே எடுததுணணும ஆகாரமேயனறி குழநதையின தாயாா குருவியைபபாா, காககையைபபாா எனறு விளையாடடுககாடடி வேணடாம எனறு மறுககும குழந தைககுத திணிககும சோறு பலகாரம முதலியனவலல. இவைகள போஷிபபதறகுப பதிலாக நோயகளையே வருவிககும அதுபோலதான நாமாகக கறறு அறியும குறளகளும பிறா உரைகொணடு கறகும குறளகளும

## உரைகளின் உபயோகம்

இஙஙனம கூறுவதால உரைகளே அனாவசியம எனறு உரைபபதாக நினைககவேணடாம. நான உரைபபதெல் லாம முதலில நாமாகவே குறளைக கற்றுணர முயலுதல் வேணடும; அபபொழுது சில குறளகளை நனறாய் அறிந்து கொள்வோம, அவை நமது அனுபவததிற்கும சரியா

யிருக்கும், அதன் பின்னர் நமக்குப் பொருள் நன்றாய் விளங்காத ஏனைய குறள்களைக் கற்பதற்காக உரையாசிரியர்கள் துணையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதே யாகும் அங்ஙனம் கடைசியாக உரைகளைக் கையாளப் போகும்பொழுதும் நான் மேலே ஆசிரியர் விஷயத்தில் மறவாதிருக்க வேண்டும் என்று கூறிய மூன்று விஷயங் களையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுதல் அவசியம்.

தவிர உரையாசிரியர்களின் துணையை உபயோகிப் பதில் மற்றுமோர் கஷ்டமுண்டு. அவர்கள் ஆசிரியர் கருத்திற்கிணங்கவே உரை கூறுவதாக எவ்வளவுதான் உறுதி கூறினாலும் அவ்வுறுதி மொழியை நம்பிவிட லாகாது நம்பிவிடவும் முடியாது யார் நூலைப் படித் தாலும் தம் மனோபாவத்திற் கிணங்கவும் தம் உபயோகத் திற்கு வேண்டிய முறையிலுமே கற்பார்கள். ஆகையால் உரையாசிரியர் கூறும் உரை ஒரு விதமாக விருக்கும். நாம் கற்கப்புகும் முறை வேறுவிதமாக விருக்கும். நம்மு டைய உபயோகத்தைக் குறித்தே நாம் கற்கப் புகுகின் றோம் ஆகையால் அதற்கிணங்கவே நாம் அவ்வுரைகளை உபயோகித்துக்கொள்ளல் வேண்டும். ஆனாலும் எல்லா அற்நூல்கள் விஷயத்திலும் "யாண்டும் மறவாமே நோற்பது ஒன்றுண்டு". அது எந்தப்பாகத்தை எடுத்துக் கொண்டாலும் அதற்கு உயர்ந்த, விரிவான, யாரும் ஒப்புக்கொள்ளக்கூடிய விதமாகப் பொருள்காண முயலல் வேண்டும் என்பதாகும். உரையாசிரியர் எவ்வளவு பெரியவராக மதிக்கப்பட்டிருந்தாலும், அவரைவிட நாம் எவ்வளவு அறிவில் குறைந்தவர்களாக இருந்தாலும், விரிவான உரையல்லாதவைகளை அறவே அகற்றிவிடத் தயாராயிருக்கவேண்டும் உதாரணமாக. எல்லோரும் பொதுமறை என்று போற்றும் திருக்குறளின் முதல் அதிகாரமாகிய கடவுள் வாழ்த்தில் கூறப்பட்டுள்ள முதற் குறளில் காணப்படும் ஆதிபகவன் என்பதற்குப் பொது

வான பதமாகிய கடவுள் எனபதைப பொருளாகக கூறுமல உமையொருபாகன என்று பொருள் கூறுவது பிழையாகுமலலவா ?

"அறததான வருவதே யினபம் மறறெலலாம
புறதத புகழு மில"

எனனும குறள பொதுவாக அறததின லடசணததைக கூறும அறன வலியுறுததல எனனும அதிகாரததில காணும்பொழுது, குறளில காணும அறம எனபதறகு இலலறம என்று பொருள இயம்புதல எவவிததததிலும ஏறகாது அன்றே?

"உணணாமை யுளள துயிாநிலை யூனுணண
அணணாததல செயயா தளறு"

எனனும குறளில காணபபடும அளறு எனனும மொழிககு நரகம என்று பொருள கூறுவதை நமபிக்கை மாத்திரமே ஆதாரமாகவுளள நரககொளகை என்று கூறுபவர் ஏறறுககொளளா ரன்றே? துனபம என்று பொருள கூறினுல எலலோரும ஒபபுககொளவா, அதனுல அப பொருள கொளவதே சிறபபுடைததாகும.

## முடிவுரை

மேறகூறிய போநதவணணம குறளைக கறபதே பயனளிககும பாதை எனபது என அபிபபிராயம. என அனுபவமும அதுவே. எலலாக குறளகளையும கறறுக கொளவதைவிட சில குறளகளையேனும கறறு அதனபடி நடநது அதன உணமை உபயோகததை உணர்நது கொளவதே மேனமை தருவதாகும அபபடி ஒனறிரண்டு குறளகளையாவது அனுபவ உரைகலலில தீடடிப பொருள கணடு பயன பெறுபவனே உணமையில திருககுறளைப போற்றுபவனுவான அபபடிபபடடவனுககே அநநூல

எனறும புலரா தியாணரநாட் செலலுகினும
நினறலாந்து தேனபிலிறறு நீரமையதாயக—குன்றாத
செநதளிர்க் கறபகததின தெயவததிருமலாபோனம.

# கம்பனைத் துய்க்கும் முறை

## நூல்கள் வகை

'குறள் கற்கும் முறை' என்று ஒரு கட்டுரை எழுதியுள்ளேன். அது போலக் கம்பனைக் கற்கும் முறை எழுத முடியுமோ? வள்ளுவரைக் கற்கலாம், ஆனால் கம்பனைக் கற்பது எப்படி? மனிதனிடம் அறிவு, உணர்ச்சி, செயல் என்று மூன்று அம்சங்கள் உள. அந்த மூன்று அம்சங்களைக் கொண்டு அறிஞர்கள் இலக்கியத்தை அறிவு நூல்கள், உணர்ச்சி நூல்கள், அற நூல்கள் என்று மூன்று வகையாய்ப் பிரிப்பர். அறநூல்களும் அறிவுநூல்களுள் அடங்கும், உணர்ச்சிநூல்கள் தனியாக நிற்கும். அவையே ஆற்றல் உடையன, ஆதலால் இலக்கிய நூல்களை அறிவு நூல்கள், ஆற்றல் நூல்கள் என்று பிரிக்கலாம் என்று ஆங்கில அறிஞர் டிகவின்ஸி கூறுகிறார். இந்த உணர்ச்சி நூல்களே உண்மையில் இலக்கியமாகும் என்பது பெரியோர்களுடைய துணிபு. உணர்ச்சி நூல்கள்தான் காவியங்கள். உணர்ச்சி எழாத வரை இலக்கியம் எழுவதில்லை. கவிதை உணர்ச்சியில் உற்பவித்து உணர்ச்சியை உண்டாக்கும். கவிஞன் உணர்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்து தன்னை மறந்த லயந்தன்னில் இருக்கும் பொழுது அவனிடம் கவிதை பிறக்கும். அவன் உணர்ச்சியோடு அனுபவித்ததைத் தன்னுள் அடக்கமுடியாது வெளியிட்டு அதைப் பிறர்க்கும் ஊட்டுகிறான். கவிஞனின் அனுபவம் அவனுடைய உணர்ச்சியுடனேயே வெளியிடப்படும் பொழுது அதற்கு ஒரு உருவம் கொடுக்கப்படுகிறது. அழகிய கருத்தைப் பொதிந்து வைத்துக் கொண்ட ஒரு உருவம் மட்டும் கவியாகி விடாது. கவி பெற்ற அந்த அனுபவம் அவன் கவிதையின் மூலம் படிப்போராகிய நம் மனத்தில்

பதிநது கொளள வேணடும அநத அனுபவமும, கவி ஞநத உணாசசியோடு அனுபவிததாரோ அதே உணர்சசி யோடு நமககும ஏறபட வேணடும. ஆகவே உணாசசியின வேகம எவவளவு முககியமானது எனபது புலனுகும

## அறிவு நூல்கள்

அறிவு நூலகள, அறநூலகளோ, உணாசசி துளி யேனும தலைகாட்டினுல அவை உணடாகமாட்டா, உருக குலைநது போகும, உணமை ஒளிநது கொளளும. காய தல உவததலினறி ஒருபொருடகண ஆயும பொழுதே இநத நூலகள பிறககும கணிதம, ரசாயனம, சரிததிரம, தததுவ சாஸதிரம, முதலியவறறில உணாசசிககு இட மேது? ஸயனஸோ, சரிததிரமோ, தததுவமோ, இவற் றில உணாசசி புகுநது விடுமானுல அவை உடனே உணாசசி நூலகளாக மாறிவிடும இருபது வருஷங களுககு முன நடநத உலக யுததததில நிகழநத சமபவம ஒனறு அபபொழுது பததிரிகைகளில வெளிவந திருநதது. அதை ஆதாரமாக வைதது ஸ்ரீ. வ வெ ஸு அயயா 'அழேன ழககே' எனறு ஒரு சிறு கதை எழுதி யிருககிறுா. அநதச சமபவததைச சரிததிர நூலில படிககலாம அதையே அயயரின கதையிலும காணலாம ஆனுல சரிததிரததில விஷயததை அறிவோம, கதையிலே அதை உணாவோம. சரிததிரததில அதைக கறகலாம, ஆனுல கதையில அதைக கறகிறேமா அனுபவிக் கிறேமா? அயயா கதையை வாசிககும பொழுது அழேன ழககேயின வீரததில, அனபில, தேசபகதி யில ஈடுபடடு நமமையே மறநது விடுகிறேம. அதுபோல சரிததிராசிரியன நமமை மறககச செய்யமுடியுமா?

சநதிர மணடலததை வான சாஸ்திரிகள ஆராய்நது பல உணமைகளைக கண்டறிகினறனர் ஆனுல நம சிறு

குழநதை அமபுலியைக கண்டு ஆனநதிக்கினறதா, ஆராயகினறதா? தாவர சாஸ்திரிகள செடி கொடி களைத தம ஆராயசசிச சாலையில அறுத்துப பிரிதது அதனுள மறைநது கிடக்கும உணமைகளைத தேடுகின றனா 'ஆனால யாரேனும தம தாயின கலலறையில படாநதுளள கொடிகளைப பாாததும தாவர ஆராயசசி யில இறஙகுவதுணடோ?' எனறு ஆஙகில மகா கவி ஓர்ட்ஸ்வோாத கேடகிறாா சைககிள வணடியை ஒரு எஞசினியா பாாததால ஒரு சககரததுககுப பின மற றொரு சககரம ஒழுஙகாயப போகினறதே, அதன அமைபபு எனன எனறு யோசிதது ஆராய ஆரமபிபபாா. ஆனால கவிஞனுககு அநத விஷயம மூளையில படுவதே யிலலை. கவிஞன,

அககாளும் தஙகையும் போல்
அவை போகும் அழகைப் பாா.

எனறு அதைப பாாததுககொணடே நினறு விடுகிறான.

## உணர்ச்சி நூல்கள்

ஆகவே அறிவு நூலகளைக் கற்கலாம, அறநூலகளைக் கறகலாம, ஆனால உணாசசி நூளகளைக கறகமுடியாது. உணாசசி நூலகளை அனுபவிககலாம, அநத அனுபவத தில அறிவு காணமுடியாத உயாநத உணமைகளைக காணலாம; உனனத லடசியஙகளை அடையலாம; களஙக மறற இனபம பெறலாம் உணாசசி நூலகள தரும் இன் பததிலும உயாநத இனபம வேறு கிடையாது. அவை உள்ளத்தை உரமாக்கி ஊக்கமும உற்சாகமும் ஊட்டக கூடிய இனபமாகும. அததகைய பேரினபததைத் துயபபதே உணமை இலக்கிய நூலகளைப படிபபதன் நோககமாகும்.

## ஆராய்ச்சிகள்

கமபனைப பறறிப புலவாகள எததனையோ ஆராயசசிகள வெளியிடடு வருகினறனா. கமபன வாலமீகியை எவவளவு தூரம தழுவி எழுதுகினறுன எனபதைப பறறி விவரிககிறாகள. சிலா கமப ராமாயணததில வடமொழிப பதஙகள எததனை எனபதைப பறறி ஆராய்கினறாகள சிலா கமபன தமிழா நாகரிகததைத தழுவி எழுதுகினறு, ஆரியா நாகரிகததைத தழுவி எழுதுகினறு எனற விசாரணையில ஈடுபடுகினறனா சிலா கமபனில அறவிஷயஙகளைககூறும பாடலகள எவை எனறு தேடுகினறனா சிலா கமபன வளளுவருடைய குறளகளில எதை யெலலாம எடுதது ஆளகினறுன எனறு பாாக்கினறனா. சிலா கமபனுககுச சைவ சமயததில துவேஷமுணடா எனற கேளவியில இறஙகுகினறனா. இஙஙனம பலவிதமான ஆராயசசிகள இவறறில பல அறிவுககு விருநதாய அமைகினறன ஆனால, இநத ஆராயசசிகள மூலம கமபனைக கறக முயலகினறேமே தவிர கமபனைத துயககினறேமா? உணாசசி நூலைக கறக முயலலாம, ஆனால அநத நூல எனன பயன கருதி எழுநததோ அநதப பயனை அடைய முடியுமோ? ஒரு மலரைப பற்றி—இதன பெயா எனன, இதன ஜாதி எனன, இது உண்டாகும நிலம யாது, இதன உறுபபுககள எவை எனறு ஆராயசசிகள நிகழததலாம. ஆனால், முகாநதாலனறி மலரின மணததைப பெற முடியுமோ? மலரின அழகை நுகராது, மணததை முகராது, எததனை ஆராயசசிகள நிகழ்ததி எனன பயன?

இலக்கிய நூலைபபறறிய இந்த ஆராயச்சிகள அதிகமாக நம கவனததைக் கவரவே நாளடைவில நாம ஆராய்சசிகளை நினைந்து கவிதையையே—இலக்கியத்தையே—மறந்து விடுகிறேம். ஏதேனும் ஒரு சமயம இலக்கியம,

கமபராமாயணம ஒனறு இருககினறதே எனற ஞாபகம வநதாலும அபபொழுது அதை அனுபவிககமுடியாதவாக ளாக நினறு விடுகிறோம ஆராயசசிகள அனுபவிககும ஆறறலை அழிதது விடுகினறன. ஆராய்ச்சிகள அவசியமே யானாலும் அவைகளைவிட இலககியமே அதிக அவசியம, அதுவே பிரதானம எனபதை ஒரு பொழுதும மறநது விடலாகாது

## ஆராய்ச்சியும் அனுபவமும்

அதுமடடு மனறு. கமபனைத துயதத பிறகுதான கமபனை ஆராயப புகவேணடுமேயனறி ஆரமபததிலேயே ஆராயசசியில இறஙகிவிடலாகாது நுகாசசிககு முன ஆராயசசி எனபது குதிரைககு முன வணடி எனபது போலாகும ஆராயசசி நுகாசசிககுரிய ஆறறலை அழிதது விடாவிடடாலும அதிகமாகக குறைததுவிடும இநத உணமைககுப பாடசாலைகளில இலககியஙகளைப படிககும மாணவாகள சானறு பகாவா பாடசாலைகளில இலக கியஙகளைப பறறிப பல விஷயஙகள கறபிககிறாாகள ஆனால இலககியஙகளை நுகர யாா பயிறறுவிககிறாாகள ? நாடகக கவிகளில தலைசிறநத ஷேகஸபியரின நாடகங கள கறபிபபதை அனுபவததில அறிவேன இனறு பதது வரி, நாளைப பததுவரி, இவவிதமாகவே பாடம. அனறு அனறு கறபிககப படும பதது வரிகளைப பறறிய ஆாத தஙகள, பாட பேதஙகள, மேறகோளகள முதலியன கறறுததரபபடுகினறன ஆனால நாடகததில ஒரு காடசி யேனும ஒரே தடவையில வாசிக்கப படுகிறதா ? மாணவா அதைத துயகக வழிகாடடப படுகினறனரா ? கிடையாது ஆதலால மாணவாகள ஷேகஸ்பியரின உனனதமான நாடகஙகளின சுவையை அறியாா. அநத நாடகஙகளைப பறறி அறிஞா செயதுளள ஆராயசசிகளையும வியாக்கி யானஙகளையுமே அறிவாாகள். இநத முறையின்

அனுஷ்டானததால் மாணவாகள பாடசாலையில படிக்கும காலததில தாஙகள படிக்கும நாடகஙகளைத தங்கள் தலையில சுமததிய பாரமாக நினைதது விடுகினறனர். அவறறைத தான சுமநது தொலைய வேணடும, அவை தவிர ஷேகஸபியரின வேறு நாடகஙகளை வாசிபபானேன, அதிகப பாரம தேடிககொளவானேன எனறு எணணி விடுகினறனா. அதே காரணததால பாடசாலையை விடடு வெளியேறி வாழககையில புகுநத பின, 'அபபா, பாரம தொலைநதது!' எனறு படிதத நாடகஙகளின பெயாகளைககூட மறநது விடுகினறனா ஷேகஸபியா பெரிய நாடகக கவிதான, ஆனால அவரைப படிததது போதும எனறு எணணி விடுகினறனா ஷேகஸபியா நாடகஙகள உறசாகம ஊடடுபவை, உனனத லடசியஙகள காடடுபவை, ஆனநதம அளிபபவை, அறிவை விசாலப படுததுபவை, ஐயோ! இநத இலககியததை ஏனோ இவவாறு கசபபாககுவதில முனைநது நிறகினறனா!

பாடசாலைகளில ஷேகஸபியருககு ஏறபடும கதிதான பாடசாலையிலும, பிரசஙக மேடையிலும, பததிரிகை அரஙகததிலும கமபனுககும ஏறபடடிருககிறது ஆரர்யசசிகள நடககடடும ஆனால அனுபவம பெரிதா, ஆராயசசி பெரிதா? அதையும யோசிககடடும. 'கல்வியிற் பெரியவன கமபன' எனறு கூறி மகிழவதைவிட 'கவியிற பெரியவன கமபன' எனறு உணாநது மகிழவதனறோ அவசியம.

ஆராயசசி மிகுதியால கமபனைப பறறியும கமபன கவிகளைபபறறியும பல அரிய விஷயஙகளை அறியமுடியும. ஆனால கமபன மனததில தோனறி அவன கவியில உயிா பெறறு நிறகும உணாசசிகளோ, அவை வாசிபபோா மனததில எழுபபககூடிய ஆனநதமோ நம கைககு எடடுவதிலலை. கமபன [illegible] அனுபவிககவேயனறோ?

## ஆராய்ச்சி யாருக்கு ?

ஆராயசசிகளைபபறறி இனனுமோர விஷயம மாம் பழததைதக குறிதது சாஸதிரிகள பலவிதமான ஆராயசசிகள நிகழ்ததலாம. ஆனால அவை சாதாரண மாந்தரகளுக்கு ஆததமாகுமோ, பயனபடுமோ? சாதாரண மாநதர விருமபுவது மாமபழததைதச சுவைதது நுகரவது ஒனறு தானே! அது தானே அவரகள சகதிககு உடபடடதும! அவரகள அவவிதம நுகரவதால மாமபழததின பயனை அடைநது விடுவாரகள. அதுபோல கமபனைபபறறிய ஆராயசசிகள சாதாரண அறிவினரககு விளஙகா. அவரககு அதனால பயன உணடாவதிலலை ஆனால அவர்களுககுக கமபனை அனுபவிககும மாரககததைதக காடடி விடடாற போதும, கமபனால கிடைககககூடிய பலனை அடைநது விடுவாரகள

உலகில தோனறியுளள மகா கவிகளில கமபன ஒருவன எனபதில சநதேகமிலலை ஆயினும மறற மகா கவிகள பிற தேசஙகளில படிககபபடுவதுபோல கமபன தமிழ நாடடில படிககபபடடககாணோமே! மறறக கவிஞர களின இலககியஙகள ஏராளமாகவும மலிவாகவும அச சிடடபபடடுத திரளான ஜனஙகள வாஙகி வாசிககிறாரகள. ஆனால நமமுடைய கமப ராமாயணததிறகுப பிழையில லாத பதிபபுககூட இனனும வெளிவரவிலலை! கமபனைப பறறித தமிழ நாடடில அறிநதவர அதிகமா யிருக்க மாடடார. கமப ராமாயணப பிரதிகள் எததனை விறகப படுகினறன? எததனை ஜனஙகள அவைகளை வாசிக் கினறனர? மிகமிகச சொறபமே. காரணம எனன? நாடடில காணபபடும எழுததது வாசனைக குறைவு ஒரு காரணமதான. ஆனால எழுததது வாசனை யுடையவரும கம்பனைத தொடுவதிலலையே, தொட அஞ்சுகின்றாரகளே! காரணம என்ன? கமபன் என்றால், 'நம்மால படிக்க

முடியுமா? நமககு அறிவு போதுமா?' எனறு எண்ணு கின்றனா அபபடி எணணைச செயதுவிட்டனர் ஆயாய்ச்சி யாளரும, பணடிதரும. அப்படி எணணும்படி அவாகள் செய்யாவிட்டாலும, கமபனைபபடிபபது எளிது, நுகர்ந்து ஆனநதிபபது சுலபம எனறு எணணுமபடி அவாகள் செயயவிலலை எனபதைமட்டும நான உறுதியாகக் கூறுவேன.

' ஆனால ஆராயசசிகள அவசியம எனறோ அலலது ஆராயசசிகளைப படிகக வேணடியதிலலையெனறோ நான கூறவிலலை கமபனைப படிதது அனுபவிகக முயனறபின, அவனிடம பெறவேணடிய உணாசசிகள அனைததையும பெற முயனறபின ஆராயசசிகளைப படிககலாம நமககு விளஙகாதிருநதவறறை அவை திடீரென விளஙகச செயய லாம அதனால நம இனப உணாசசி அதிகரிககலாம ஆனால, நாமாகக கமபனைத துயகக ஆரமபிககுமுன ஆராயசசிகளைக கையில எடுததல கூடவே கூடாது. எடுததால பிறகு நாம கமபனைக கையில எடுககபபோவ திலலை எடுததாலும, அபபம தினனுமல அபபததில குழிகளை எணணும வேலையிலேயே ஆழநது விடுவோம. கமபன நம கையினினறு நழுவிவிடுவான

## கம்பனைத் துய்பபது எளிதா?

சரி, கமபன கவிஞரின தலைவன ஆயிறறே, அவனை எலலோருமசாமானியருமஅனுபவிகக முடியுமோ? முடியும், அதில சநதேகம வேணடாம கணகளை மூடிக கொளபவா தாம காணமுடியாது கணகளைத திறநது காண ஆசையுடையாா கடடாயமாகக காணமுடியும. காணபவர் அனைவரும ஒரே விதமாகக காணபா எனறு கூற முடியாதுதான , எலலோரும ஒரே அளவில ஆனந தத்தைப பருகுவர் எனறு கூறமுடியாதுதான. ஆனால் பாாபபதும் நிசசயம, ஆனநதம பருகுவதும் நிசசயம்.

இந்த உண்மையை மனத்தில் வைத்தே பிரஞ்சுப் பேராசிரியர் அனடோல் பிரான்ஸ் என்பவர், 'பேரிலக்கியங்களைக் கதைகளாக எழுதிக் குழந்தைகள் கையில் கொடாதீர். பேரிலக்கியங்களையே அவர்கள் கையில் கொடுத்து விடுங்கள்'' என்று கூறுகிறார்.

கம்பன் இனியன், கம்பனை ரஸிப்பதும் எளிதே. ஆயினும் கம்பனைக் கையில் எடுத்த மாத்திரத்தில் சுவைத்துவிட முடியாது. பொருள் விளங்கிக் கொள்ள வேண்டும். ஆனால் அது பெரிய சிரமமன்று. ஆகவே, கம்பனை நுகர ஆசையும், அதற்குரிய ஆள்வினையும் இருந்தால் கம்பனைத் துய்த்தல் மிக எளிது. கம்பனுடைய கவிகள் மிகவும் எளியவை என்பது மட்டுமன்று, எளிமைக்கு உயர்ந்த எடுத்துக் காட்டாகக் கம்பனையே கூற வேண்டும்.

கம்ப ராமாயணம் ஆறு காண்டங்கள், ஆயிரக்கணக்கான கவிகள். அவற்றுள் எங்கே ஆரம்பிப்பது, எதைப் படிப்பது? கம்ப ராமாயணம் ஒரு பெரிய அழகிய பூங்காவனம் போன்றதாகும். எத்தனையோ நிற மலர்கள், எவ்வளவோ மணமுள்ள பூக்கள்! அந்த வனத்தில் உலவும் வண்டு எந்த மலரில் வேண்டுமானாலும் உட்காரும், தேன் நுகரும். அதற்கு ஒழுங்கும் கட்டுப்பாடும் கிடையாது. அதுபோல ஆறு காண்டங்களையும் வாங்கிக் கொள்ளுங்கள். எப்பொழுது எது இஷ்டமோ அதில் எந்த இடத்தையேனும் திருப்பிப் படியுங்கள். இன்பமே உணர்வீர்கள்.

## ஒரு விஷயம்

ஆயினும் கம்பனால் கிடைக்கக் கூடிய அதிக இன்பம் பெற வேண்டுமானால் ஒருவிஷயம் மட்டும் அறிந்து ஞாபகத்தில் வைத்து அனுஷ்டிக்க வேண்டும். திருக்குற்றாலம் போகிறோம். அங்கே மலைகளைப் பார்க்கிறோம், நீர்வீழ்ச்சி

யைக காணகிறோம. ஆனால நாம அனைவரும ஒரே விதமாகப பாாககிறோமா? இலலை. ஒருவா நீரவீழச்சியை மட்டுமே பாாதது நிற்பாா ஒருவா அநத வானளாவிய தேககு மரததை மட்டுமே கணடு நிற்பாா ஒருவா மலைமேல தவழும மேகஙகளில ஈடுபட்டு நிறபாா இவவாறு ஒவவொருவரும ஒவவொரு பொருளில சிநதை பறிகொடுதது நிறகலாம. ஆனால ஒருவா இவை யனைததையும சோதது நோககி அநத அழகில லயித்துப் போவாா கமபா பால காணடததில வரைக காட்சிப படலததில சநதிர சைலததை வாணிபபதைக காணக. மலையில காணும ஒவவொரு காட்சியையும தனித தனியே கூறி இறுதியில மலை முழுவதையும வாணிதது விடுகிறா

ஒருவன காட்டுககுள நுழைநதால மரஙகளைத தனித தனியாகவும பாாககலாம, மரஙகள எலலாம சோநத அவவனததையும பாாககலாம வனம மிகப பெரியதானால முதலிலேயே வனம முழுவதையும பாாகக முடியாமல போகலாம ஆனால வனததைப பகுதி பகுதியாகப பாாகக முடியும ஆகவே வனததுககுச சென றவன மரஙகளைக கணடும அழகு அனுபவிககலாம, வனததின பகுதிகளைக கணடும அழகு அனுபவிககலாம மரஙகளைக காணபதில ஆனநத முணடு ஆனால, மரத தொகுதியான வனப பகுதியின் அழகே அதிகமான ஆனநதம அளிககும, அதிகமான உணாசசிகளை உணடாககும

ஒரு பெரிய மாளிகை. அதை ஒரே காட்சியாக நோககிக களிககலாம். ஆனால, மிகப பெரியதானால பல திசைகளில சென று அதன அமைபபையும அழகையும பருகலாம அதலலாமல அரசமுனறில, கொலுமணடபம், நீதி மனறம, பநதாடு பூமி என று பல பகுதிகளை ஒவவொன்றுகப பாாததும மகிழலாம. ஒரு மண்டபததுள நுழைநததும மண்டபம முழுவதையும கண்டு களிப்பு

தோடு அதனுள காணபபடும ஒவவொரு தூண, ஒவ்வொரு சிலை, ஒவவொரு ஓவியம எனறு ஒவவொனறையும் தனித்தனியே நோககியும ஆனநதிககலாம

## துய்க்கும் முறை

இது போலததான கமபராமாயணததைத துயபபதும கமபராமாயணம முழுவதும படிதது அது ஒவவொரு பாகமும மறற பாகஙகளோடு அமைநது அழகு பெறறு ஆனநத மளிபபதைக காணலாம அது எலலாககும எளிய காரியமனறு கமபராமாயணம ஒரு நாடகம போனறதாகும அதனால ஒவவொரு காடசியையும தனியாக எடுததுப படிககலாம அதன மூலம கமபன எழுபபும உணாசசிகளைப பெறறு இனபம காணலாம. இவவிதம ஒரு காடசியைப படிககாமல தனிக கவிகளையும படிதது இனபுறலாம காடசிகளைப படிததாலதான உணாசசிகள உணடாகும தனிககவிகளை நுகாவதால உணாசசிகள உணடாதல அரிது உணடானாலும அவை பிரமாதமலல, அவை கமபன எழுபப எணணிய உணாசசிகள எலலாம அலல

நாடகாசிரியன நாடக அமைபபில காடசி காடசியாகவே தன கருததில விளைவிககிறுன அதனால கமபராமாயணததைத துயககக விருமபுவோா காடசிகளைப படிததலே அவசியம அபபொழுதே கமபனால அடையக கூடிய பயன முழுவதையும அடைவா.

கமபா தமது காவியததை நாடகமாக அமைக்காத காரணததால அதைப படலஙகளாகப பிரிககிறுா. ஆனல் ஒவவொரு படலததிலும பல காடசிகள அமைந்து கிடக்கும அதனால நாம கமபரைக் கையில் எடுத்தால் ஒரு படலம முழுவதையும் படிககவேண்டிய அவசிய

யிலலை. அதில ஏதேனும ஒரு காடசியைப படிக்கலாம, படிதது இனபுறலாம அதிக சிரமமுமிலலை அதற்கு அதிக நேரமும தேவையிலலை, ஆதலால யாரும கமபனைததுய்க்கத தயஙக வேணடிய அவசியமிலலை.

எநதக காடசியைப படிபபது? இதறகுப பிறர யோசனை கேடக வேணடியதிலலை பிறரககுச சில காடசிகள் பிரயோஜனமுடையதா யிருககலாம; அதிக அழகு வாயநததாகத தோனறலாம. ஆனால அநதக காரணததால அதே காடசிகள நமககும அழகாயத தோனறும, பிரயோஜனமாயிருககும எனறு கூறமுடியாது. அது மடடுமனறு. நம மனநிலை எவவாறுளதோ அதறகுத தகக காடசியே ஆனநதம அளிககும. ஆதலால நம விருபபமபோல நம மனநிலைககேற்ற காடசியை எடுததுப படிதது இனபம நுகரவதே முறையாகும

லிடடன எனனும ஆஙகில அறிஞர ஒரு கதை கூறுவதுணடு ஒருவன தேனீககள வளரதது வநதான அவை அவனுககுத தேன சேரதது உதவிவநதன ஆனால அவன அநதத தேனைவிட உயரநத தேன உணடாகக விருமபினன அதனால அவன தன ஈககளின சிறகுகளைக கததரிததான அவைகளுககு முனனால மிகச சிறநத புஷபஙகளைக கொணடு வைததான ‘இநதப புஷபஙகளை விடடு அநதத தேனீககள பறககமுடியாது. இருந்த இடத்திலேயே எதிரில கிடநத புஷபஙகளிலேயே தேன எடுககும அநதப புஷபஙகளின தேன மிகச சிறநததாகும்’ எனறு நினைததான ஆனால அவன ஏமாந்து போனன அநதத தேனீககள தேன சேகரிக்கவே முடியவிலலை! இதிலிருநது நாம தெரிநதுகொளவது என்ன? தன்னிஷடமபோல படிபபவனே சந்தோஷம காண்பான். அறிஞர் மெசசும் காட்சிகள என்று

நினைத்துக் கையில் எடுத்தால் ஆனந்தம் காணாமலே போகக்கூடும்.

இவ்விதம் காட்சிகளைத் தனித்தனியாகப் படிக்குமாறு, கம்பராமாயணத்தில் படலங்களாகப் பிரித்திருப்பதை மாற்றிக் காட்சிகளாகப் பிரித்து அடையாளம் செய்து வைத்துக்கொண்டு பிரியமான காட்சியைப் படித்துக் கம்பனைத் துய்த்தல் முறை. பற்பல காட்சிகளையும் அனுபவித்த பிறகு படலங்களை அப்படியே வாசிக்கலாம். பிறகு பல படலங்களும், காண்டங்களும் ஒன்று சேர்ந்து விளங்கும் ராமாயணத்தின் கட்டுக்கோப்பு முழுவதையுங்கண்டு ஆனந்திக்கலாம். காவியப் பாத்திரங்களின் குணாதிசயங்கள் வெவ்வேறு இடங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கும் முறையைத் தெரிந்து களிக்கலாம். முதலில் காட்சிகளைப் படிப்பதால், கவி நமக்கு உணர்த்த விரும்பும் உணர்ச்சியோடு அவனுடைய 'செஞ்சொற் கவியின்ப'த்தை அப்படியே அனுபவிக்க முடியும்.

# தமிழ் மொழி வளர்ச்சி

## பாஷையின் அவசியம்

மனிதன மனுலக வாழவின லடசியததை அடைவதறகு, ஆனம லாபம தேடுவதறகு அததியாவசியமாய, வேணடிய சகதிகள இரணடு ஒனறு உடலின உரம, மறறொனறு அறிவின ஆறறல இவவிரணடு மினறேல ஆனம வளாசசி ஒருநாளும அமையாது மறற பலஙகளை வளாபபதறகு வேறு பல சாதனஙகள தேவையாயிருபபதுபோல இவவிரணடு பலஙகளின வளாசசிககும தேவையாகும உடமபின நலததிறகும பலததிறகும தேவையாயிருபபது உணவு "உணடி முதறறே உணவின பிணடம" எனபது புலவா கூறறு அதுபோல அறிவு விளககததிறகும வளாசசிககும அவசியமான சாதனம பாஷையாகும மனிதனுககும மிருகததிறகும உளள விததியாசம எனன? மனிதனைபபோலவே மிருகததிறகும ஐமபுல நுகாசசியுணடு; அதனிடம ஞாபகசகதியும காணபபடுகினறது மிருகம் சுகதுககஙகளையும அறியும, விருபபு வெறுபபுகளும உடையதாகும ஆனால மனிதனிடமுளள ஒரு விசேஷ சகதி மிருகததினிடம கிடையாது அதுவே அறிவாகும. உதாரணமாக, மிருகம பல மரஙகள உளள இடத்தில் போனால அவைகளில ஒவவொனறையும தனிததனியாகவே அறியமுடியும அவறறையெலலாம ஒனறு சோதது அறிநது, அவற்றிற்கெலலாம பொதுவாகவுளள சாராமசஙகளைத தொகுதது "மரம" எனனும பொருளைத தெரிநதுகொளவதிலலை அவவிதம தெரிந்து கொளளும சகதி மனிதன ஒருவனுககே உணடு. அநதச சகதி அவனிடம இருபபதாலேயே பாஷையும அவனிடம் பிறக்கலாயிறறு. அநதச சக்தி மூலமாய அறிவை விருததி

செயதுகொளவதற்கும, அறிவுக கிளாசசியின பயனுய புதுபபுதுக கருததுககள தோனறி உணமைகள புலனுவதறகும, புலனுகும உணமைகளைப பிறாககு உரைபபதறகும, பிறா கூறும உணமைகளைக கேட்டறிநது கொளளுவதறகும தனிபபெருஞ சாதனமாயிருபபது பாஷையொனறேயாகும. பிறவியிலேயே ஊமையாகவும செவிடாகவும பிறககும குழநதைகளின மனம விரியாமல, அறிவு விளககமுறுமல அடகக முறறு விலஙகுகளின உணாசசியையே ஒததிருபபது யாவரும அறிநத விஷயம அதனுலேயே பாஷா நததுவ பணடிதராகிய மாகஸ முலலா எனபவா "அறிவிலலையேல பாஷை ஏற்படுவதிலலை, பாஷையிலலையேல அறிவு வளாவதிலலை" எனறு கூறுகினறுா

## பாஷை தருவது தாய

மனிதன ஆனம வளாசசிககான யாககை, அறிவு இரணடுடனேயே மண ணுலகில பிறககினறுன ஆனுல அவன அபபொழுது அவவிரணடின வளாசசிககும அவசியமான ஆகாரம, பாஷை இரணடையும தேடிக கொளளச சிறிதும சகதியறறவனுயிருககினறுன அஙஙனம இருககும நிலைமையில அவனுககு அவவிரணடையும அளிதது ஆதரிபபவள அவன அனனையே யாவள. தாய குழநதையின உடல நலததைப பலவாறு பேணி வளாக்கினறுள்.

"நொநது சுமநது பெறறு நோவாம லேநதிமுலை
தநது வளாத தெடுததத தாழாமே
யந்திபகல கையிலே கொண்டவனைக் காப்பாறறுகின்றுள"

தவிர பால குடிககுமபொழுது குழந்தையினேடு கொஞசுகையில இறவாத இன்ப அன்பு மொழிகள கூறுகினறுள, தொட்டிலில தூஙக வைக்குமபொழுது இனனிசைக

கவிகள் பாடுகின்றாள் குழந்தைக்கு அறிவு வரும் பருவம் வந்தவுடன் பல கதைகளும் பல பாடல்களும் கூறி மகிழ்விக்கின்றாள். அக்கதைகள் பாடல்கள் மூலம் நாட்டின் பெருமையையும் நாட்டாரின் ஸ்வதர்மத்தையும் எளிதில் பொருள் விளங்கும்படி பசுமரத்தாணிபோல பாலன் மனத்தில் பதியும்படி செய்கிறாள். அங்ஙனம் அவள் அன்போடு அளிக்கும் அருமையை நோக்கியே அவள் தரும் உணவுக்கு "அமுதப்பால்" என்றும் அவள் பேசும் பாஷைக்கு "அன்னைமொழி" என்றும் அழகான பெயர்கள் அமைவதாயின.

## தாய் மொழியின் பெருமை

அங்ஙனம் ஆன்ம வளர்ச்சிக்கு அருந்துணையாக அன்னை உவந்தளிக்கும் தாய்மொழியொன்றே ஒருவன் தன் அறிவு விளக்கத்திற்கும் விசாலத்திற்கும் சுலபமாகக் கற்றுக்கொள்ளவும் உபயோகித்துக்கொள்ளவும் முடியும். தவிர, பாஷை எவ்விதம் ஒருவனுடைய உள்ளக்கருத்துக்களை உருவாக்கவும் உருவாக்கி வெளியிடவும் உபயோகப்படுகின்றதோ, அவ்விதமே அது அதனைப் பயிலும் ஜாதியாரின் அகவாழ்வு புறவாழ்வு இரண்டையும் அயலார்க்கு அறிவிக்கும் ஆற்றல் உடையதாகும். ஒரு ஜாதியாரின் பாஷையையும் அப்பாஷையிலுள்ள இலக்கியச் செல்வத்தையும் ஆராய்ந்தால் அந்த ஜாதியாரின் வாழ்வின் பல அம்சங்களையும் எளிதில் அறிந்துகொள்ள முடியும். ஆகையால் தாய்நாட்டின் க்ஷேமத்தை நாடுபவர் தாய் மொழியைப் பெரிதும் போற்றி வளர்க்கக் கடமைப் பட்டவராவர். தாய்மொழி மூலமாகத்தான் தாய்நாட்டின் பக்தியை ஜனங்களிடை வளர்த்தல் கூடும். அவ்வுண்மையை அறிந்தே அயர்லாந்து நாட்டு தேசபக்த சிரோன்மணிகள் ஆங்கில பாஷையால் அழிந்து மறைந்த ஐரிஷ் பாஷையைப் புனர் உத்தாரணம் செய்வ

தையே அவாகள செயயத துணிநத சுயராஜய முயற்சியில முதனமையானதாகக கருதி அதன வளாசசிககு அலலும பகலும உழைதது வநதது யாவரும அறிநத விஷயம தேச நலம தேடுவதறகுச சிறநத வழி தேச பாஷை வளாசசியே. அதனாலதான ஆஙகில தேச அருஙகவிகளில ஒருவரும, ஐரோபபா முழுதும பெருங கீாததி பெறறவரும, அடிமைக குழியில வீழநது அலல லுறுவாரை அதனினறும கரையேறற அனவரதமும உழைதது உயிா துறநதவருமான பைரன பிரபு "எவனுககுத தாய பாஷையினிடம அனபிலலையோ அவனுககுத தாயநாட்டினிடமும அனபிராது" என்று அருளிச செயதாா

## தமிழா அன்பு

அவவாறு பல விததததிலும அருமை பெருமை வாயநத தாயமொழியைப பேணுவதும போறறுவதும் மனிததததனமை வாயநத யாவாககும இயறகையே யாகும அனனை மொழியிடம அடஙகாத அன்புகொண டவாகளும அமமொழியின புகழகளைப பேசுவதில பேரா னநதம காணபவாகளும ஆகிய பல ஜனசமூகஙகளில் தமிழா ஆதிகாலமுதல தலைசிறநதவராவா சில வேளை அவாகளுடைய அனபு அளவுகடநது விடும. அபபொழுது அவாகள தஙகள தமிழ் மொழியில் "எலலாப பொருளு மிதனபாலுள, இதனபால இலலாத எபபொருளுமிலலையால" என்றும், இமமொழி யால இசைகக இயலாத எணணஙகள இவவுலகில எஙகும கிடையா என்றும இயமபுவா தமிழா தஙகள் தாயமொழியின பெருமைககுக காரணஙகள பல கூறுவா. பரஞசோதி முனிவா, வரநதருவார், சிவஞான சுவாமிகள போனற முறகாலப புலவாகள் சிவபெருமானே தமிழ மொழியைச சிருஷடிததாா; அதை அகததி

யாககு அவரே உணாததினா, அததமிழைச திருசசெவி மாநதும பொருடடே அவா தெனனாடு போநதாா ; போநது சஙகப புலவரோடமாநது பசுந்தமிழினைப பண்ணுறறத தெரிநதாயநதாா, தாமும செநதமிழ்ச செயயுள பல செயதருளினா, தமிழுக கவி பாடும புலவாககருளியும அவா தமககாகப பல இயறகைககுமாறான அறபுதச் செயலகளை நிகழததியுமுளளா எனறு பாடியுளளா.

இததகைய காரணஙகளை இககாலததில யாரும ஒபபுககொளளாா. ஆகையால சிறிது காலததிறகு முன னிருநத செநதமிழ் ஆசிரியா சுநதரம பிளளை மேறகூறிய புராணக கதைகளைப புறககணியாவிடினும தமிழ மொழி யின சிறபபிறகுச சரிததிர சமபநதமான வேறு சில காரணஙகள கூறியுளளாா. அவை தமிழபாஷை முதுமொழி, அனாதி, அதுவே ஆதியில ஜகமுழுதும பரவியிருநதது, ஏனைய முதுமொழிகள இறநதுபட அதுமடடும தனனிடததுப பல மொழிகளைத தோறறு விததுககொணடு இனறுகாறும இளமையோடு இலஙகு கினறது எனபனவாகும. ஆனால ஒரு பாஷையின பெரு மைககு அதன தோனறிய காலததொனமை, பயினற நிலபபரபபு, இககால இளமை நிலைமை மூனறுமே போதிய காரணஙகளாகா. ஒரு பாஷையின மேனமையை உளளவாறு அறிவிபபது அதன் சொறசுவை பொருட சுவை இரணடுமேயாகும. அததகைய மொழியினபமும் இலககியப பெருமையும தமிழ பாஷையினிடம அளவுககு மிஞசி அமைநதிருககினறன எனபது தறகாலததில தமிழமொழிககுப புததுயிா தரவநத சுபபிரமணிய பாரதியாரின கருதது. உணமை வெறும புகழசசியிலலை எனறு உறுதி கூறுகினறாா. அவா அபிபபிராயததை உண்மை இலககியச சுவையின இலடசணததைத் நனகறிந்த எவரும் ஆடசேபியார்

## இலககிய வளாசசி

ஒரு மொழியின பெருமை அதன சொறசுவை பொருடசுவை இரணடிலுமே அமைநதுளளது என்று கூறினேன ஆகையால ஒரு மொழியை வளாகக வேணடுமானால அதன மொழி வளததைப பெருககுவதோடு அதன இலககியச செலவததையும செழிககச செயதல அவசியமாகும அஙஙனம செயய முயல ஆரமபிககையில நாம அவசியம அறிநதுகொளளவேணடிய விஷயம ஒன்றுணடு அதாவது இலககியச சுவையின உணமை லடசணம யாது என்று அறிவதே அதை நனகு அறிநது கொணடால தான நம முனனோா வைததுப போன நூலகளில எவை உணமையான இலககிய இனததைச சோநதவை என்று அறிநது அவைகளை மடடும காபபாறறவும ஏனையவறறை விலககிவிடவும, புதிதாக இலககியஙகள இயறற ஆரமபிககுமபொழுது அவை உணமையான இலககியமாய இருககவேணடும என்று கணணுங கருததுமாயச செயயவும, பிறநாடடு நலலறிஞா சாததிரஙகளை மொழி பெயாககும பொழுதும அவைகளில தலைசிறநதவைகளையே அறிநது எடுததுக கொளளவும இயலும ஆகையால தமிழப புலவாகள முதறகண செயயவேணடிய வேலை “இலககியச சுவையின இலடசணத”தைத நிாணயிபபதே அஙஙனம நிாணயிகக எழுமபொழுது அதறகு ஆதாரமாக நமது தமிழமொழியில உளள இலககணஙகளை மடடும கொளளுதல தவறு. இலககிய இலடசணததை அறிவதறகு இலககண நூலகளைவிட இலககிய நூலகளே பெரிதும பயனதரக கூடியவை. தவிர உணமை இலககியசசுவை ஒருபொழுதும இலககண வரமபிறகுள கடடுப படடுக காணபபடமாடடாது அநேகமாக எலலா பாஷைகளிலும கவியரசாகள என்று புகழநது போறறப

படுபவா எலலாருமு தஙகள காவயஙகளில இலககண வரமபை மீறி நடநதவாகளே யாவா

## இலககியச சுவை

மேலும இலககியசசுவை ஒரு பாஷைககெனறு தனியாக ஏறபடடதனறு அலலது அது பாஷைககு பாஷை மாறிமாறித தோனறும தனமை வாயநததனறு மனிதனுடைய சிநதனை உலகம எஙகும ஒரே தனமையுடையதாய் இருபபதால இலககியசசுவை எனபதும எலலா பாஷைகளுககும பொதுவானதேயாகும ஆதலால இலககியச சுவையின பணபை அறிய விருமபுவோா ஏனையமொழிகளில உளள இலககியஙகளையும அமமொழியாளா ஆராயநது கூறும உணமைகளையும கவனிததலவேணடும இதுவரை இருநததுபோலிலலாமல தமிழப புலவாகள ஏனைய மொழிச செலவக களஞசியததில புகுநது புதுபபொருள தேடுவாராக நமது நாடடில சமஸகிருதமும தமிழும பல ஆயிரககணககான வருஷஙகள ஒருஙகு வாழநதுவநதும சமஸகிருத நூலகளில வெகு சிலவே தமிழ மொழியில காணககிடககினறன, அவையும அநேகமாய இலககியஙகள அலல, மதம வைததியம போனற அறிவு நூலகளேயாகும காளிதாஸருடைய சாகுநதலம எனனும தலை சிறநத சமஸகிருத நாடகம தமிழாககளாயுளளவாகளில எததனை பேருககுத தெரியும வெகு வெகு சிலாககேயாம. ஆனால ஆஙகிலேயா நமது நாடடுககு வநது சில நூறறாணடுகளேயாயினும அவாகள சமஸகிருத நூலகள, தமிழ இலககியஙகள, கனனட காவயஙகள முதலியவைகளைத தஙகள பாஷைகளில மொழிபெயாதது அனுபவிதது வருகினறனா அவாகள நமமைபபோல கிணறறுத தவளையாய் இருபபதிலா. எபபடித திரைகடலோடியும திரவியநதேடுகினறனரோ அபபடியே தேசஙகளதோறும்

சென்று அஙகுளள இலககியப பொககிஷததினினறும எழில மணிகளைப பொறுககித தஙகள பாஷை இலககியஙகளோடு சேரததுககொளளுகினறனா ஆவபெரி பிரபு எனனும ஆஙகில ஆசிரியா "உலகிலுளள இலககியஙகளில தலை சிறநத நூறு" எனறு குறிப்பிட்டு ஒரு ஜாபிதா தயாா செயதிருககினறனா, அதில உலகில உளள சகல பாஷை இலககியஙகளும காணபபடும 'ஏனைய மொழிகளிலுளள இலககியஙகளை வாசிததறிய முடியாவிட்டாலும அவைகளின பெயாகளையாவது அறிநதிருககவேணடும, அதுவே ஒரு பெரும காரியமாகும அஙஙனம் பெயாமட்டுமாவது அறியவேணடிய நூலகளில வாலமீகி ராமாயணம, வியாசா பாரதம முககியமானவை' எனறு பிரெஞசு இலககியச சுவை அறிஞாகளில கீாததி பெறறவராகிய ஸெயினடபூவ எனபவா கூறுவதை நேயாகள கவனிககவேணடுகிறேன நமது தமிழக குறள அனனிய பாஷைகள பலவறறில மொழி பெயாககபபட்டிருபபதை யாவரும அறிவா, ஆனால அதுபோல நாமும பிறபாஷை நூலகளை மொழிபெயாதது உபயோகிததுக கொளள வேணடுமெனறு கருதுவதிலலை

## புது நூல்கள் இயறறல்

இறவாத புகழுடைய புது நூலகளும தமிழ மொழியில இயறறவேணடும ஆனால அநநூலகளை இயறறுமபொழுது பழைய இலககண விதிகளையொட்டியே செயதல வேணடுமெனறு கருதறக இலககியஙகள ஜனஙகளுடைய வாழவின சாராமசமான பிரதிபிமபஙகளே யாதலால, தறகால வாழவின தனமைககுத தககவாறே புதிய இலககியஙகள இயறறுதலவேணடும. இலககியச சுவை குன்றுமலிருககமட்டும பார்ததுக கொள்ள வேணடுமே தவிர, அது எநத நடையில, எநதப பாவினததில, எநத உருவில அமைககவேணடுமோ

அவறறைப பழைய நூலகளின வரமபிறகுள கடடுபபடுததி விடவேணடாம "எளிய பதஙகள, எளிய நடை, எளிதில அறிநது கொளளககூடிய சநதம, இவறறினையுடைய காவியமொனறு தறகாலததிலே செயது தருவோன நமது தாய மொழிககுப புதிய உயிர தருவோனாகினறான" எனறு சுபரமணய பாரதியாா கூறுவதை மறககலாகாது

## எளிய நடை

எளிய பதம எளிய நடை எனறால கிராம ஜனஙகள பேசும கொசசை மொழியனறு, தவறான உசசரிபபனறு சாதாரண வழககததிலுளள பதஙகளைச சரியாக எழுததுக கூடடவும உசசரிககவும குழநதைகளுககுக கறறுககொடுகக வேணடும நோடடீஸகளிலும நோடடீஸ பலகைகளிலும காணபபடும பதஙகளைப பாரததால நான கூறுவதன பொருள விளஙகும

எளிய பதஙகளும எளிய நடையும அழகாக இரா எனறு எணணலாகாது அழகுககு அஙக ஒறறுமைதான அவசியம, ஆபரணஙகள அவசியமிலலை அபபடியிருகக அஙகஙகளை அபபடியும இபபடியும திரிதது வைததுக கொளவது அழகாகுமா, அவலடசணமே ஆகும அதேமாதிரி அருஞ சொறகளையும கடினமான இலககணப பிரயோகஙகளையும கையாளல நடையின அழகைக கெடுததுவிடும. அதறகும மேலாக அதைப பழகிப பேசின அருவருபபை உணடாககிவிடும

அலஙகாரம வேணடாம அழகு போதும எனறவுடன சிலா அலஙகோலமே அழகு, அதுதானே இயறகை எனறு எணணிவிடுகினறனா. அநேகா இபபொழுது பததிரிகைகளில கைககுவநத பதஙகளைக கொட்டி அதுதான இயறகையான நடை எனறு

கூறுகின்றனர். அதுவுந் தவறு. கிராமியப் பதங்கள் போன்றவைகளைச் சந்தர்ப்பம் அறியாது உபயோகித்தால் பாஷையின் அழகும் தூய்மையும் கெட்டுப்போகும்.

## மொழியின் தூய்மை

அது போலவே பிறமொழிச் சொற்கள் கலந்தாலும் தமிழின் தூய்மை கெட்டுவிடும் ஆமாம், சமஸ்கிருத மொழிகளை மட்டுமன்று, பிறமொழிகள் எதுவாயினும் அனாவசியமாகக் கையாண்டால் நம்முடைய பாஷைக்கு நன்றன்று ஆனால் அதற்காகப் பிறமொழிகள் ஒன்றையுமே சேர்த்துக்கொள்ள மாட்டோம் என்று கூறினால் பாஷை வளர்ச்சிக்கான வழிகளில் ஒன்று அடைபட்டுப் போகும். ஆங்கில பாஷைதான் அதிக மொழி வளமுடைய பாஷை என்று எல்லோரும் ஒப்புக் கொள்கின்றனர். அந்தச் செழிப்புக்குக் காரணம் என்ன? ஒரு மரமானது பலவிடங்களுக்கும் வேர்களை அனுப்பி உரத்தைக் கிரகித்துத் தன்னுடைய சாறாக ஆக்கிக்கொள்ளுவது போல ஆங்கில மொழியும் சகல பாஷைகளிலும் தனக்கு அவசியமான மொழிகளைக் கிரகித்துத் தன்னுடையதாக ஆக்கிக்கொள்வதே ஆகும். பந்தல் என்பது தமிழ்மொழியா? ஆங்கில மொழியா? அது தமிழில் பிறந்ததுதான் ஆனால் இப்பொழுது ஆங்கில பாஷையில் இடம் பெற்றுவிட்டதால் ஆங்கில மொழியுமாகும். தமிழ்ப் பந்தலைச் சேர்த்துக் கொண்டதால் ஆங்கில பாஷை அழகிலும் குன்றிவிடவில்லை, தூய்மையிலும் குறைந்துவிடவில்லை

இந்த உண்மையை அறிந்தே நமது முன்னோர்கள் திசைச் சொற்கள் என நாற்றிசையிலிருந்தும் வரும் சொற்களைக் கையாண்டிருக்கின்றனர். நாம் அயோனியரை யவனர் ஆக்கினோம். அயோனியர் இஞ்சிவேரை

ஜிஞசிபோ ஆககிககொணடாாகள அதையே ஆஙகி லேயா ஜிஞெசா எனச செயது கொண்டாாகள. பல ஜாதியாரோடு கூடடுறவு நிகழுமபோது சொறகள மாறிபபுகுவது இயறகை தானே?

ஆயினும திசைச சொறகளையும அவசியமின் றிச சோததலாகாது அபபடிச சோததால பாஷை அழகிலும ஆறறலிலும குனறிபபோகும வருஷம என பது வழககச சொல ஆயவிடடது அதை அகறற வேணடாம, ஆனால அதறகாக "சமவதசரம்" எனபதை யும உபயோகிகக எணணககூடாது "கோரம்" இலலாத தால கூடடம நடககவிலலை எனறு கூறலாம, ஆனால அதறகாக கோரமிலலாததால "மீடடிங" நடககவிலலை எனறு கூறுதல தவறு.

தமிழ மொழியின தூயமையைப பாதுகாகக விரும பினும நாம இனனும ஆஙகில மோகததிலிருநது விடுபடடதாகத தெரியவிலலை நமமில பலா தஙகள கையெழுததை ஆஙகிலததிலேயே எழுதுவதை அறி வேன. சிலா தஙகள பெயரைத தமிழில எழுதினும தஙகள தநதை பெயரைக குறிககும எழுததை ஆஙகிலத திலேயே எழுதுகிறாாகள பொ திருகூடசுநதரம எனறு எழுதாமல பி திருகூடசுநதரம எனறு எழுதலாமா? அதுமடடுமனறு, பி திருகூடசுநதரம எனறு எழுதாமல P திருகூடசுநதரம M A B. L எனறு எழுதினால எத் தகைய தவறு செயகிறேன எனறு எனனிடம பாாபப திலலை அதுமடடுமா? ஆஙகிலமே அறியாத பணடிதாகள கூட ஆங்கிலததில கையெழுததிடுகிறாாகள எனறால நமககுளள ஆஙகில மோகததை எனனெனறு கூறுவது?

அதுமடடுமா? சிலா பிரசஙகம செயயும்பொழுதும் கடடுரை எழுதுமபொழுதும சுததமாகத தமிழை உப

யோகிபபாரகள ஆனால நணபரகளிடம பேசுமபொழுதும கடிதப போககுவரதது செயயுமபொழுதும ஆஙகிலத தையே உபயோகிபபாரகள கடிதஙகள எழுதுவதற காகத தம பெயர விலாசம அசசிடடு வைததிருககிறார களே அதை ஆஙகிலததில எதறகாக அசசிடவேணடும?

இனறும நம தமிழ நாடடில எஙகு போனாலும தமிழரகளுடைய வியாபார ஸதலஙகளுககு ஆஙகிலப பெயரிடுவதைக காணலாம. இருபது வருஷஙகளுககுமுன "ரெஸடோரணட" எனனும காடி வநதது இபபொழுது அதுபோய "கஃபே" எனனும சிவிஙகி வநதிருககிறது

அதோடு எஙகும பெயரப பலகைகள எலலாம ஆஙகிலததிலேயே எழுதபபடுகினறன அபபடியே தமிழில எழுதினாலும ஆஙகிலததுககு அடியே சிறு எழுததிலேயே எழுதபபடுகினறது. வககீலகள தஙகள பெயரை ஆஙகிலததில எழுதித தொஙகவிடுகிறாரகளே, எதறகாக? தமிழ அறியாதவரகள எததனைபேர அவரக ளிடம கடசிககாரராய வருகினறனர? அவர வாழநாளில ஆஙகிலர ஒருவரகூட வருவதிலலை, அஙஙனமிருகக ஆஙகி லததில எழுதுவதேன?

இனறும தமிழ நாடடில நூலகள எழுதும அறி ஞரகள தஙகள நூலகளுககுப பெயரையும முகவுரையை யும ஆஙகிலததில எழுதுவதை விடமாடடேன எனகிறார களே, தமிழநூலைப படிககக கூடியவரகள அநத நூலின பெயரும முகவுரையும தமிழில இருநதால படிகக முடி யாது போவாரகளா? இதெனன விபரீதமான வழககம?

இநத ஆஙகிலமோகம எலலோரையும பிடிதது ஆடடி வருகினறது. புலலுக கடடுககாரிகூட பயர பாகஸ

என்றுதான் கூறுகிறார்கள் அநேகர் ஆங்கில மொழிகளைக் கேட்டிருப்பார்கள், அதைச் சரியாக உச்சரிக்கத் தெரியாது ஆனாலும் அதன் விஷயத்தைத் தமிழில் கூற மாட்டார்கள் அரைகுறையாகக் கேட்ட ஆங்கில பதத்தையே கூற விரும்புகிறார்கள்

## காந்தியடிகள்

மகாத்மா காந்தியடிகள் தென்னாப்பிரிக்காச் சிறையி லிருந்தபொழுது தம் குமாரன் அதிகச் சுகவீனமா யிருந்ததை விசாரித்துத் தம் மனைவியாருக்குத் தம் தாய் பாஷையாகிய குஜராத்தியில் கடிதம் எழுதி சிறை அதிகாரியிடம் கொடுத்தார் ஆங்கிலத்தில் எழுதாவிட்டால் அனுப்ப முடியாது என்று அதிகாரி கூறினார். என்னுடைய தாய் பாஷை தெரியாதவருக்குத்தான் ஆங்கிலத்தில் எழுதமுடியும், என்று காந்தியடிகள் கூறினார் சிறை அதிகாரி அப்படியானால் கடிதத்தை அனுப்பமுடியாது என்று கூறினார் அனுப்பாவிட்டாலும் பாதகமில்லை அதற்காக ஆங்கிலத்தில் என் மனைவிக்கு எழுதமாட்டேன் என்று காந்தியடிகள் கூறிவிட்டார். தம் குமாரன் நிலைமையைப் பற்றிய கவலை நெஞ்சைத் தின்றுகொண்டிருந்த சமயத்தும், தாய் மொழியைத் துறக்க மனங்கொள்ளவில்லை அத்தகைய பெரியோரே தாய் மொழியை வளர்ப்பவர் ஆவர்.

ஆனால் இந்த ஆங்கில மோகம் நம்முடைய தமிழ் நாட்டில்தான் அதிகம் ஆந்திர தேசம் சென்றாலும் சரி, வடநாடு சென்றாலும் சரி, அதை அவ்வளவாகக் காணமுடியாது நாம் ஆங்கிலத்தில் பேசினாலும் அங் குள்ளவர்கள் நாம் இந்தியராயிருப்பதால் நம்மிடம்

தங்கள் தாய்பாஷையிலேயே பேசுவார்கள். பிரான்ஸ் தேசத்தில் சாதாரண வண்டிக்காரன்கூட தன்னுடைய தாய்மொழியில் தவறாகப் பேசுவதைப் பிரமாதமான இழிவாகக் கருதுவானாம். ஆமாம் ஒவ்வொரு பாஷையின் உயர்வும் தாழ்வும் அதை உபயோகிப்பவர்களையே பொறுத்ததாகும். ஆதலால் நாம் ஒவ்வொருவருக்கும் நம் தமிழ் மொழியை வளர்ப்பதில் பொறுப்புண்டு என்று உணர்ந்து நடக்கவேண்டும்.

ராஜன் எலக்டிரிக் பிரஸ், சென்னை-1.

